உ

சிவோஹம்

காழிக் கண்ணுடைய வள்ளலார்

அருளிய

# நியதிப் பயன்



காழி

வித்வ சிகாமணி

ப. அ. முத்துத் தாண்டவராயப் பிள்ளை

1932

## இதுவரை கிடைத்திருக்கும் வள்ளல் நூல்கள்

கண்ணுடைய வள்ளலார்:—

ஒழிவிலொடுக்கம்
மாயாப்பிரலாபம்
சிவாநந்த மாலை
பிராசாத விருத்தம்
பஞ்சாக்கர மாலை
ஞானசாரம்
தத்துவ விளக்கம்
திருநெறி விளக்கம்
நியதிப் பயன்
சட்டைநாதர் தோத்திரம் Etc. (ய)

சட்டைநாத வள்ளலார்:—

சதாசிவ ரூபம் (க)

சுயம்பிரகாசவள்ளல்:—

சிவப்பேறு
ஐக்கியவியல்
சிவாநந்த மாலை (6 செய்யுள்) (௩)

சிவஞானவள்ளலார்:—

சத்தியஞான போதம்
பதிபசுபாச விளக்கம்
சித்தாந்த தரிசனம்
உபதேச மாலை
சிவஞானப் பிரகாச வெண்பா
ஞான விளக்கம்
அத்துவிதக் கலிவெண்பா
அதிரகசியம்
சிவாகமக் கச்சிமாலை
கர்ணாமிர்தம்
சுருதிசார விளக்கம்
சிந்தனை வெண்பா
நிராமய வந்தாதி
அறுபத்துநாலு சங்கை
தசவழக்குச் சிந்தனை
குருமரபு சிந்தனை
அநுபவ சந்திரிகை
திருமுகப் பாசுரம்
அதிகாரப்பிள்ளை அட்டவணை
மரபட்டவணை. (உய)

ஆக நூல் ௩௪.

உ

சிவோஹம்

---

காழிக் கண்ணுடைய வள்ளலார்

அருளிய

# நியதிப் பயன்*

கலித்துறை

## வினு

ஆகம சாரம தான குகபத் ததியதனிற்
பாகம தான பொருளை நியதிப் பயனதென்றே
வேகம தாக விளம்பிடு தற்கியல் வேணுபுரத்
தேகம தானசிற் குஞ்சரக் கன்றினை யேத்துதுமே. க

மந்திர மாவ தெதுகுரு வென்ற வசனமெது
சிந்தனை சேருஞ் சிவதீக்கை யென்றதென் செப்பியிடுஞ்
சுந்தர மான வுபதேச மேதெனச் சொல்லிடுவாய்
தந்திரந் தேருந் தமிழ்க்காழிக் கண்ணுடைச் சம்பந்தனே. உ

காலத்தி லாரிய னேமுத னுல்வர் கடிதெழுந்து
சீலத்தி னுற்சிவ ரூபம் நினைக்குந் திறமிதுவென்
கோலத்த மேனியங் கெத்தல மீதினிற் கொண்டிடுத
ரூலத்து ளோர்புகழ் கண்ணுடைச் சம்பந்த சற்குருவே. ௩

---

*இஃது வடமொழியில் உள்ள குக பத்ததியின் சாரமாகச் சீகாழிக் கண்ணுடைய வள்ளலார் தமது கண்ணுடைய பரமாசாரிய மூர்த்தி யாகிய திருஞான சம்பந்த வள்ளற்பெருமானை முன்னிலைப்படுத்தி இயற்றியருளியதாகும். (1450 A. D.)

சீகாழிக் கண்ணுடைய வள்ளலாராதீனத்து ஸ்ரீமுத்துச் சட்டைநாத வள்ளலாரது பிரதியையும், வைத்தீச்வரன் கோயில் ஸ்ரீசோமசுந்தர தேசிகரது பிரதியையும், சென்னைத் துரைத்தனத்தாரது கையெழுத் துப்பிரதி நிலயப் பிரதியையும், எனது பிரதியையும் ஒப்பிட்டு வெளி யிடப்பட்டது.

பதியதற் கெத்திசை போக்கிச் சலமலம் பாற்றிபிடல்
விதிதருந் தூரம தெவ்வள வேகுதல் வெவ்விருளி
னதிமுக மெத்திசை யாகத்திற் பீடை யடைந்திடினும்
வதியு மிடம்சங் கடமாகி லேது வகுத்தருளே. ௪

வலக்கையின் மண்ணெங் கெடுக்குத னீக்கிடு மண்ணெடுத்துத்
துலக்கிடக் கொள்ளும் பிரமாண மேது சொலுங்கரையிற்
சலத்தினுக் கெத்துணை தூரமிருத்த றகுந்திசையென்
விலக்கிடக் கையிற் றருமண்ண தேது விதித்தருளே. ௫

மானதி யாகிற் சௌசாதி செய்யும் வகையதெங்ஙன்
ஆன விரவி லருஞ்சுத்தி செய்யு மடைவதெங்ஙன்
ஈன மருவுடற் பீடைய தாகி லியற்றுவதென்
மோன விரதிகள் மூவர்கள் செய்யும் முறையருளே. ௬

கடிக்கீ ழுடியள வாய்மண் கொடுமெணிற் காண்டலெத்திக்
கடுக்கான கையணை வாய்கொப் புளிக்கி லருந்திசையென்
மடுப்பான வாச மணுதியிற் பாத மருவலெங்ஙன்
எடுப்பான நெற்றியி னீறணி யாவிடி லேதருளே. ௭

சலமோ சனத்தி லருஞ்சுத்தி செய்யுந் தகைமையெங்ஙன்
புலமேவு சுக்கில நீங்கிடிற் செய்யும் புனிதமெங்ஙன்
மலமேவு வாயு விசர்ச்சத்திற் சுத்தி மருவலெங்ஙன்
நலமேவு காழிப் பதிக்குரு நாத நவிற்றுவையே. ௮

அருந்தந்த சுத்திசெய் காட்டம் பரிக்கு மருமனுவே
திருந்திடுந் தானம தேதெத் திசைமுக மாயிருத்தல்
பொருந்திய போதினிற் காணாத தேதைப் பொருவில்சுத்தி
திருந்துமுள் ளோபுறம் போமுனஞ் செய்குதல் செப்புவையே.

செப்புமத் தந்த மெதுமுத லாச்செய்தல் சேர்வலமோ
தப்பி லிடமது வாய்ச்செய்த லோவது தான்மெள்ளவோ
வொப்பில் கடினம தாய்ச்செய்வ தோவுறைந் தோங்குசுத்தி
மெய்ப்புறச் செய்வதிங் கெத்துணை யென்ன விளம்புவையே. ௰

இட்டிகை சாம்பற் றவிர்காட்டத் தாற்செயி லேதுகுறை
விட்ட திதியி லருஞ்சுத்தி செய்யில் வினையதெங்ஙன்
திட்டென வாய்கொப் புளித்தபின் னேவது செய்யுமுன்னே
வுட்டனி நாவினைச் சோதனை செய்த லுரைத்தருளே. ௰௧

உரைத்திடு நாவழி காட்டம் பரிக்கு முயர்மனுவென்
றுரைத்தல மீதினில் வாய்சுத்தி செய்வதெத் தானமதாந்
திரைப்புனல் மேற்கொப் புளித்தா லருந்துயர் சேர்வதெங்ஙன்
வரைத்தென் விரலினிற் கீழ்மண் ணெடுத்தல் வகுத்தருளே. ௰௨

அந்தமண் ணுஷுடல் பூசி லகலு மவலமெது
கந்த முறுந்துண்டங் கண்செவி மூடிற் கருமமெது
சிந்தையி லத்திர தெய்வங் கருதிச் சிவமனுவைச்
சந்த முறச்சொலி னீங்குவ தேதெனச் சாற்றுவையே. ௰௩

தடநீ ரதனிற் சிவதீர்த்தம் வைக்கும் தகைமையெது
திடமாக மண்ணி லொருகூறு திக்கிற் றெறிப்பதென்னே
யிடமாக மற்றொரு கூற்றினை நீர்வளைத் திட்டதெது
வுடன்மீது பூசி முழுகிடி லேதிங் குரைத்தருளே. ௰௪

சலக்கரை யேறிமெய் யீரந் துடைக்கிற் றருந்திசையென்
விலக்கிடு மீரத் துகில்கொடு நீவில் வினையதெங்ஙன்
துலக்கிடச் செய்தனின் றூவிருந் தோவத் துகில்புனைந்து
கலக்கமில் கன்மஞ் செயிற்குறை யேதெனக் காட்டுவையே. ௰௫

## நியதிப்பயன் வினா உக

உத்தர பூருவம் நோக்கி நியதி யுஞற்றுவதென்
சித்திர வாசன மேவி யிருக்கும் திறமதுவென்
பத்திர மானநி ரீக்கண மாதி பதித்தலென்னே
யத்திர சந்திய தேதென் றெனக்கரு ளாரியனே. ௰௬

ஆசமித் தாற்பய னேதக் காமுத் திரையதெது
நேசமுற் றேற்றக் குறைவுகொண் டாற்குறை நீடுவதென்
மாசதற் றூது மநுவடி வேது மனுமுடிவிற்
றேசதற் றூதுஞ் சுதாவென்ப தேதெனச் செப்புவையே. ௰௭

இருக்கால் வலக்கரத் தங்குட்ட மூலத் தினுலுமித
ழொருக்கா லகங்கையி னுலுந் துடைக்கி லுறுபயனென்
சுருக்கா தனுமிகை யங்குட்ட மேவிய தொல்விறையென்
பெருக்காத் தொடுமிடந் தொட்டத னுற்பயன் பேசுவையே.

திருநீ றெடுக்கும் பிரமாண மேது சிறந்திடக்கை
தருநீறு சுத்தி தகுவிப்ப தேது தனியுருவென்
பெருநீர்மைத் தெய்வம தேதிடுந் தானங்கள் பேணியிட்டால்
வருநேர் பலனெது வெங்குரு வாண வகுத்தருளே. ௰௯

பின்பாச மித்தத ஞற்பய னேது பிறங்குமனத்
தன்பான் முழுகி லகலுவ தேதங் கணிவலக்கை
முன்போ விடக்கைபின் ஞேமுறை சோதனே முற்றுவதிங்
கின்பாரு மத்திரத் தாற்றுடைத் தாற்பய னேதருளே. ௨௰

மீளக்கை கூட்டிய சத்திய மந்திர மேவகைக்கும்
கோளத்தி ஞற்பய னேது குறிக்கர ந்யாசமெது
நீளத்த மங்கத்தி லொன்றல வோவந்த நீவிரலிற்
கேள்சுத்த மந்திரம் வைக்குந் தகைமை கிளத்துவையே. ௨௧

அங்க நியாசத்தி ஞற்பய னேதிங் ககவிதயந்
தங்குஞ் சிவாசன மூர்த்தி வியாபகந் தானதெங்ங
னெங்குநி யாசமுடிவின் மகாமுத் திரையதை யெய்தியதென்
வெங்குரு மாநகர் வாழ்குரு நாத விளம்புவையே. ௨௨

பஞ்சப் பிரமத்தைப் பீசங் குறைத்துப் பகர்வதுவென்
விஞ்சச் சடங்கத்தைத் தீர்க்கம தாக விளம்புவதெ
னெஞ்சச் சொலாவவ் வுகாரத்தை யோதிடி லேதுபயன்
தஞ்சப் பதாம்புய தென்காழிக் கண்ணுடைச் சம்பந்தனே.

பேசும் பிரணவஞ் சங்கிதை யாற்பிராணு யாமமெது
மூசும் வளியை யிரேசக பூரக முற்றுவதென்
வீசுமச் சத்தப் பொருளே தகங்கை விரித்துவலத்
தாசகல் சத்தச் செவிவைப்ப தேதென் றறைந்தருளே. ௨௪

பூரக கும்பக ரேசக மோவலம் பொங்கியெழு
மிரேசக பூரக கும்பக மோவியன் மாத்திரையோ
தோரக முத்தம மத்திம மீறென் றுரைப்பதென்னே
தாரக மான தமிழ்க்காழிக் கண்ணுடைச் சம்பந்தனே. ௨௫

சந்தித் தியானஞ் செயிலுள்ள நீங்கிற் றவறதெங்ஙன்
வந்திக்கு நால்வர் வழுத்தும் வடிவு மொருவடிவோ
சிந்தித்த தாற்பய னேது செழுங்கும்ப முத்திரைநீர்
முந்தித் தலையிற் றெளித்திட லேது மொழிந்தருளே. ௨௬

மிகமார்ச் சனஞ்செய்த தாற்பய னேது விளங்கியிடு
மகமா மருடனத் தாற்பய னேதது வன்றிமுன்போற்
சுகமான வாச மனுதி நியாசந் தொகுத்ததென்னே
சுகமீது ளோர்புகழ் கண்ணுடைச் சம்பந்த சாற்றுவையே. ௨௭

அங்கையி னுற்சல மள்ளித் தனைச்சுற்றி லாம்பயனென்
சங்கையி னீர்செங்கை வாரித்தர்ப் பிக்கிற் றரும்பலனே
தெங்குஞ் சொலுமந் திரங்கள் சுவாக சுதநமவென்
தங்கும் வஷடும் வவுஷடு மேதெனச் சாற்றுவையே. உஅ

சாற்றும் படந்தமு மந்தம தேதைத் தருமருளாற்
போற்றி நியதி முடித்துக் கரைவந்து பூருவத்திற்
ருேற்று மிரவி நமஸ்கார மேதெனச் சொல்லிடுவாய்
தேற்றும் பொருள்தரும் சீகாழிக் கண்ணுடைத் தேசிகனே.

நியதிப்பயன் வினு முற்றும்

## நியதிப்பயன் விடை

மந்திர மென்னு மெழுத்தினில் மவ்வென்ற வான்பொருளா
மந்திர மான திரமென்ற லப்பொரு ளாலுயிர்க
ளுந்து பிறவிக் கடனின்று மேற்றுகை யோகையொடுந்
தந்திர மீதினிற் கண்டுகொள் மந்திரச் சார்பினேயே. ௩௰

குருவென்ற சத்தப் பொருளே தெனிலதிற் குவ்வென்னமுன்
றருமந்த காரம தாகிய மும்மலஞ் சாற்றுசத்தி
யுருவெஃகு மம்மலம் போக்குகை யாற்சகத் தோதிடுவர்
கருவந்த போதங்க ணீங்கிய மாணவ கண்டுகொள்ளே, ௩௧

சிவதீக்கை யென்னும் பொருளே தெனிலதிற் றீயெனல்முன்
அவநீக் கியசிவ ஞானமுண் டாக்குகை யந்தமதிற்
பவநீக் கியவிக்கை யாருயிர் மும்மலம் பாற்றியிடல்
தவநீக் கியவுப தேசம தென்பதுஞ் சாற்றுதுமே. ௩௨

உவ்வென்ற சத்த மனுக்ரக மாமென் றுரைக்குமினிப்
பவ்வென்றல் பாவத்தை நாசம தாக்கும் பரிவினுடன்
தெவ்வென்ற தேயருள் சேர்விக்குஞ் சவ்வென்ற தீர்க்குமல
மவ்வென்ற லேனைய தோடங்கள் போக்கும் வரமுறவே. ௩௩

காலத்தி லாரிய னேமுதல் நால்வர் கருதுவது
சீலச் சிவோகம் பரவிந்து நாத தரிசனம்பின்
கோலச் சதாசிவ னேடங் குருத்திர னுக்குறிக்கும்
மேலைச் சிரம்நெற்றி மார்பினு மென்று விதித்திடுமே. ௩௪

பதியதற் குத்தரம் பூருவ மாகும் பகரிடைதான்
விதிதரு மீர்சத விற்கிடை போகன் மிகுமிருளி
னதிமுக மாமிரு தித்திசை யாகத் தயருறினும்
பொதிதரு நோக்கிற் பிணியினும் மேலும் புகலுதுமே. ௩௫

இருக்கு மிடஞ்சங் கடமாகி லும்மந்த காரத்திலு
மருத்துக் கொதித்தெழு வாதை யுறினெங் கணுமுகமாம்
பெருக்குமண் ணேதெனிற் றுருவின் மூலம் பிறங்குபுற்று
நெருக்குஞ் சலக்கரை மீதினுங் கொள்ளுத னீதியதே. ௩௬

நீக்கிடு மண்ண தெதுவெனில் வாலுக நேர்பலதாங்
தூக்கிடு மண்ணது தெங்கின் பழத்தின் றொருகுமளவாம்
போக்குஞ் சலக்கரை மீதிரு சாண்ணனப் போந்திருத்த
னோக்கலெல் லுத்தரந் தெக்கண மாக நுவன்றிடுமே. ௩௭

இடக்கர மீதிற் றருமண்ண தாமல கக்கனிமட்
டடர்த்தெழு மாநதி யாகி லெடுத்தருஞ் சுத்திசெய்த
றுடக்கருந் தாரைய தாய்விட லன்றிச் சுளகமதாய்த்
திடப்படச் சுத்திகள் செய்தல் வரமெனச் செப்பிடுமே. ௩௮

பகலினிற் பாதி யிரவினிற் செய்திடல் பங்கமுறு
மகமதிற் பீடை யிலங்கதிற் பாதி யெனவறிக
சகமதி லாற்றும் பிரம சரிவனந் தானடைந்தோ
ணிகலரு மாவிர திக்குஞ்செய் சுத்தி யியம்புதுமே. ௩௯

இயம்புங் கிருகத்தன் றன்னி லிரட்டியு மும்மடங்கும்
வயம்பெற நான்மடங் காகவுஞ் செய்தல் வரன்முறையாம்
பயங்கொடு பாதங் கழுவிடிற் பூருவம் பார்த்தியற்றல்
சயம்பெறுங் கைவா யுமிழ்ந்திடி லுத்தரந் தான்முகமே. ௪௰

ஆசம னத்தி லிடப்பத நீரி லழுத்திவல
நேசம துற்றுமுன் னீள்கரை வைத்து நிகழ்த்துவதா
மாசக லத்திரு நீறணி யாவிடில் வன்பசியாத்
தேசுகொள் கௌவியந் தெக்கண மீர்சதஞ் செப்புகவே. ௪௧

அற்ப சலம்விடிற் சுத்திகள் செய்யு மடைவுரைக்கிற்
பொற்பமர் கான்மண் கொடுசுத்தி மும்முறை யேபுரிந்து
துற்பவஞ் செய்குறி மும்முறை மண்கொடு தூய்மைசெய்து
பிற்கரந் தன்னையு மிம்முறை சுத்தி பிறங்கச்செய்யே. ௪௨

இருகையுங் கூட்டி யிருகாற் கழுவி யிருபதம்பின்
றிருவுற வங்கிரு கான்மண் கொடுசுத்தி செய்திடுக
பெருகிடு சுக்கிலம் வீழி லிருகுணி தம்பெருக்க
மருவத வாயு நிகழிற் சலசுத்தி போல்மதியே. சஙு

தொந்தனற் காட்டம் பரித்த லிதயத் துறுமனுவாம்
புந்தியிற் சுத்தி பொருந்து மிடத்தின் புறவிருத்த
வந்தம தாமுகம் பூருவம் வீட்டி லமர்ந்திடுவோன்
றந்திரந் தேரும் விரதி வடமுகந் தானறியே. சச

அவ்விடை நோக்கற் கருகமல் லாதங் கவையுரைக்கிற்
கவ்வைகொ ணீசர் கழியுயிர் யாக்கை கருதசபை
யெவ்வம தான மலமதி சூகர மெண்சுணங்கன்
செவ்விய புட்ப வதிகர நாய்க்கடுந் தீம்பறுமே. சரு

உள்ளினிற் சுத்தி யுருவித்துப் பின்வெளி யுற்றசுத்தி
கொள்ளுத றந்த மெதுமுத லென்றல் குறித்திடுவன்
தெள்ளிய ராசந் திகழ்தந்த மேல்முதற் சீர்வலமாய்
மெள்ளக் கொடுசெய்த னின்மலஞ் சேர்வரை வீற்றிருந்தே. சசு

விலக்கிய காட்டங் களிட்டிகை யாதி கொடுவிளக்கிற்
றுளக்கிடு மந்திரந் தெய்வ மிருடி தொகுபிதிர்க்கள்
கலக்க மிலாப்பல நல்காப் பராமுகங் கண்டிடுவ
ரிலக்கண மாந்திதி யல்லாது செய்யி லியம்புதுமே. சஎ

செய்தவன் முன்னிற் றலைமுறை யேழ்பிதிர் தீவினையால்
வெய்துறு முத்தி விரும்பினர்க் கென்றும் விதித்ததுவாந்
துய்யநல் வாய்கொப் புளித்தந்தச் சாதியிற் றாயகம்பை
மையறு வாணி மனுமூன்றி னுலபி மந்திரித்தே. சஅ

உரைத்தவத் தானுவைச் சோதனை மெள்ள வுளுற்றுவதாங்
கரைத்தல மீதினில் வாய்கொப் புளிக்கிற் கருதிடமாந்
திரித்து வலத்தினிற் செய்திடிற் றீநர கிற்செறிக்கும்
விரைப்புனல் மீதுமிழ்ந் திட்டாற் பசாசுரு மேவிடுமே. சகூ

எண்விரற் கீழ்மண் ணெடுப்பதிங் கேதெனி லீரசுரர்
தன்னுட லாமிந்த மேதினி யெண்விரற் றூழ்விலில்லை
மண்ணுடற் பூசில் வருமுடற் பாவங்கண் மாறுமின்றேற்
கண்ணு னுமலிக்கங் கொப்பென வேதங் கழறிடுமே. ருய

இருசெவி கண்ணிணை மூக்கைப் புதைக்கி லிருந்திடுமிந்
திரிய மதிற்கன்ம சங்களென் ருேது மிதயமதிற்
பெருகிய வத்திர தெய்வங் கருதிப் பெருமனுவை
மருவிட வோதிடில் வாசிக மானத மாறிடுமே. ருக

சிவதீர்த்தம் வைக்கும தேதெனி னீரிற் றிகழரவந்
தவநீக்கி மீன்முத லாஞ்சல செந்து சரிக்கையினு
லவநீக்கிச் சுத்தி யழுத்துவ தாமதற் பின்னர்மண்ணுற்
பவநீக்கி நீரிற் றெறிக்கிற் றிசாவிக்னம் பூறிடுமே. ருஉ

பின்னொரு கூற்றிணை நீரில் வளையிற் பிறங்குசல
முன்னுறு தோடங்கள் போக்குமற் றென்றை முறைமனுவாற்
சென்னியிற் கீழுடற் பூசிலிக் காயஞ் செறிந்தபவம்
அன்னிய மாமென வாகமம் யாவு மறைந்திடுமே. ருந

தென்றிசை நோக்கி யிருந்தங் குலர்துகில் சேர்த்தியற்றல்
அன்றியவ் வீரங் கொடுசிர மாதி யகந்துடைக்கிற்
கன்றிய ஞாளியி னுவுக் கிணையென்பர் கட்கமனு
வொன்ற புரோக்கணஞ் செய்தனற் காட்டி லுறுஞ்சுத்தியே.

ஈரத் துகில்புனைந் தேகரு மங்க ளியற்றுகினுந்
தேரிற் பலனுத வாதருந் தீவினை சேர்க்குமதற்
கோரற் புதமுற மீளவு நான முஞற்றியிடில்
வாரப் பலன்றருஞ் சுத்திய தென்று வகுத்தனரே. ருரு

மற்றிரு தூசு புனைந்தங் கிருத்தல் வரன்முறையாம்
உற்ற நியதிக்கங் குத்தர நோக்க லுயர்சைவர்க்காம்
பற்றிடு முத்திபின் வைதிகர் பூருவம் பார்த்தியற்றல்
புத்திய தாமென வாகமம் யாவும் புகன்றிடுமே. ருசு

ஆசன மேதெனிற் குக்குட வாசன மேயருக
நேச நிரீக்கண மிச்சைமெய்ஞ் ஞான நிகழ்கிரியை
மாசகல் பாநு வருவன்னி யிந்து வளர்விழியால்
ஏசறப் பார்த்த லிதற்பயன் மேலு மியம்புதுமே. ருஎ

இரவியி னூற்சலத் தேதங்க ளேது மிலாதுணக்கி
விரவிய வன்னி விழியா லெரித்து விதுவமுதாற்
பரவிய வங்கி குளிரும் படிக்குப் பதித்திடுத
லுரவு புரோக்கண மாவது மேலு முரைக்குதுமே. ருஅ

விந்து வமுதம் புரோக்கித்த நீர்சுத்தி மேவுதலான்
முந்துமத் தாடன மொக்க நிரைத்து முறைமையன்றி
வந்திடுஞ் சத்திப் பிரகாச மென்றும் வகுத்திடுவர்
பிந்தப்பி யுக்கண மாறு கிரியை பிறப்பித்தலே. ௫௬

தாளத் திரய மசுரரை யோட்டுந் தகைமையதாம்
நீளத்த திக்கினைப் பந்தனஞ் செய்வது நீடெயிலாங்
கோளத் தவகுண் டனமகிழ்ந் தீயக் குறித்திடுவா
மீளச் சுரபி பொழிபா லமுத மவாவிடிலே. ௬௦

விப்பிர ராதிய மூவர் பிரம விதிநடப்ப
ரொப்பில்சற் சூத்திர ரத்திர முந்தி யுஞற்றிடுவர்
செப்பிய சந்தி யிரவி யிடத்திற் சிவன்றனக்குத்
தப்பற வத்திரத் தாற்றர்ப் பணஞ்செய்த ருனறியே. ௬௧

அருளத் திரமிகு பாவங்கள் சேதிக்கு மாயுதமாம்
பெருகும் விதிப்படி மூழ்கினர்க் கிங்ஙனம் பேசலின்றுந்
தருசுத்த வாச மனஞ்செய்த தாற்பயன் சாற்றிடுவன்
கருவுற்ற தத்வ மிருபத்து நாலுங் கழன்றிடுமே. ௬௨

வித்தியா தத்துவ மேழு மருஞ்சுத்தி மேவுமல்லாற்
சுத்த சிவதத் துவமைந்தின் மூன்றுமச் சுத்தியுறும்
வைத்திடுஞ் சத்தி சிவத்துக்குஞ் சுத்தி மருவலின்று
மொத்திடுஞ் சத்தி மனுலயத் தானமென் றோதிடுமே. ௬௩

ஓதுஞ் சிவதத் துவமதற் காரண முற்றிடலாம்
வேத மிருக்கு முதலிய மூன்றுக்கு மெய்ப்பயனுந்
தீதகன் முத்திரை கோகன்ன மாமெனச் செப்பிடுவர்
நீதமற் றேறக் கொளிற்சுரா பானத்தை நேரொக்குமே. ௬௪

நேர்ந்து குறைகொளில் வேதங்கள் ப்ரீதி நிரம்பியிடா
வார்ந்தகுய் யாந்தங் களாந்தஞ் சிகைநுனி மட்டதென்பா
ரார்ந்திடுஞ் சுத்தி யதிதெய்வ மாவ தயனெடுமால்
கூர்ந்த வுருத்திரன் மூவரென் றாகமங் கூறிடுமே. ௬௫

கூறுஞ் சுதாவெனிற் றெய்வப்ர சன்ன மெனக்குறிக்க
வூரி லதரந் துடைக்கி லுரகங்க ளெட்டினுக்குந்
தேறுமிங் யாசங் கட்டும் பயனெனச் செப்பிடுவர்
வேறு மதோமுக நீவிற் கணேசற்கு மேவிடுமே. ௬௬

மேவு மனுமிகை யங்குட்டத் தெய்வம் விளம்பியிடிற்
றூவு மமிர்த கலேயீ சுரனெனச் சாற்றிடுவ
ரோவுந் தொடுமிடந் தொட்டாலத் தானத் துறுசுத்தியுந்
தேவு மதிட்டத் திருத்தியு மாமெனச் செப்பிடுமே. சுஎ

தேருமத் தானந் தொடுதன் முகத்தினிற் றெய்வகங்கை
கூறு மிதழிற் பிரணவம் ப்ராணன் குறித்தறுண்டஞ்
சாரும் விழிகளிற் சந்திர சூரியர் சாற்றுசெவி
பூருவ மாகிய வெண்மரும் மேலும் புகலுதுமே. சுஅ

புகன்றிடு நாபி பிரம னுருத்திரன் பொன்னகல
மகன்றிடு தோள்க ளசுவினி தேவ ருஞ்சிரமே
லுகன்றிடு மாலவ னுகு மமுத முயிரிறைக்குக்
குகன்றரு பத்ததி யித்திதி யாமெனக் கூறிடுமே. சுசு

ஓருநிட்க நிட்கத் தரையு மிருநிட்க மேலரையுந்
தருவிப் பிரர்முதல் நால்வர்க் கணியுந் தகுதியென்பர்
வருசுத்தி செய்வது கற்ப முறையில் வராததனைப்
பெருகக் கலாசுத்தி செய்தது வாமெனப் பேசிடுமே. எ௰

பேசும் வடிவு பரைவடி வாமதிற் பேணியிடு
மீசனும் வன்னி யுருத்திர னுக வியம்புமலத்
தாசறு மீரறு தானப் பெயரு மணிபயனுந்
தேசும் புகழுங் குகபத் ததிதனிற் செப்புதுமே. எக

செப்புஞ் சிரம்நெற்றி மார்பொடு நாபி செறிமுழந்தாள்
கைப்புய நீடிரு கைமுது கோடு கடிப்புறமு
மொப்பில் துவாதசத் தானம தாக வுரைத்திடுவர்
தப்பிலித் தானத் ததிதெய்வந் தம்மையுஞ் சாற்றுதுமே. எஉ

சிரத்தினி லீசன் றிருநெற்றி கந்தன் றிருந்தருள்சே
ருரத்தினில் விண்டுநல் லுந்தியிற் றுர்க்கை யுயர்முழந்தாள்
விரித்திடு மாரிட மாதர்க டோள்களில் விண்ணவர்கோன்
கரத்தினி னுக முதுகிற் பிதாமகன் கண்டுகொள்ளே. எஙு

கடிப்புற மத்திர தெய்வம தாமிரு கைகடமி
லடுத்திடப் பூசிற்சர் வாங்கமுத் தூள மணிபலனும்
விடுத்திடு தோள்களிற் புண்டர மோரங் குலம்விடக்கீழ்
தொடுத்து மணிக்கரம் பூசுதல் வாதுளந் தொன்முறையே. எச

அன்றியு நற்சிவன் சத்தி சதாசிவ னவ்வருளாம்
வென்றிகொள் வாமை முதற்சத்தி யொன்ப தெனவிளம்பும்
வன்றிற லேனைய தானங்க ளுக்கும் வகுத்தறிக
நன்றிகொ ளுலெட்டோ ரெட்டோ டஞ்சென நாட்டுவரே.

பின்பாச மித்தத னுற்பஞ்ச பூதங்கள் பேணுசுத்தி
யன்பான தீக்கையி னுலங் ககன்றிட் டிருக்கவது
முன்பாக நாடொறும் பூதங்கள்சுத்தி முயற்றுதல்போ
லின்பாமுத் தத்துவ மீள்வுஞ் சுத்தி யியற்றுதலே. எசு

மானத நானத்தி னுலுடற் பிற்பவ மாய்ந்துவிடும்
ஈனம தான வசுசி யிடக்கையை யோர்திகழு
மூனமில் சுத்தி வலக்கையி னுலத் திரவுரையா
ஞான வனல்கொ டிருகாற் றுடைக்கி னவையறுமே. எஎ

சோதித்த பின்சுத்தி யான விடக்கரத் தால்வலக்கை
பேதித் தகம்புற மங்கொரு காற்றுடை பேசுபய
னுதித் தழலத னுற்சுட்ட தாக வறிந்திடுவா
யோதிப் பெருங்காங் கூட்டுவ தின்னு முணர்த்துதுமே. எஅ

சத்தியத் தாலிரு கையினைக் கூட்ட றகுமமுதம்
வைத்தனல் வெம்மையை மாற்றி நனைத்தல் மலர்க்கரத்தி
லொத்த நியாசம தேதெனி லொண்கரச் சாயைகளுஞ்
சுத்திய தாகும் பொருட்டென வாகமஞ் சொல்லிடுமே. எசு

சிருட்டி கிருகத்தன் செய்யும் பிரம சரிதிதியா
மருட்டிகழ் வானப் பிரத்தன்சங் யாசிசங் காரமதாங்
தெருட்டு நியாச மறிந்துசெய் யாவிடிற் றீவினையா
மருட்டறு மங்கத் துடன்கையு மொன்ற லிசைக்குதுமே. அ0

சத்தி சிவமய மான விருகையுந் தாங்குவித்துண்
மத்தியி லங்குட்டங் கன்னிகை போல வரைவரையா
யொத்திடு மெட்டு விரலையுந் தாமரை யொள்ளிதழாய்ப்
புத்தியிற் பாவிக்கை யாற்கை விசிட்டம் புகன்றிடுமே. அக

அக்கை விரலி லருமனு வைக்கு மடைவுரைக்கின்
மிக்க சிவனை வெளியி லருச்சனை மேவுவபோ
லொக்குமவ் வாசன மூர்த்தியை யங்கையி லோங்கவைத்துத்
தக்க சிவற்கு நிசித்திடல் போலிங்குத் தான்செய்தலே. அஉ

முறையங்கங் யாசத்தி ஞற்பய னேதெனின் முத்திதரு
மிறையங்க மாயன்றி யீசனைப் பூசிக்கு மேதுவின்ருங்
குறையங்க மேற்சிவ பாவனை செய்பொருட் டாய்க்குறித்த
னிறையங்க மான சிவாசன மூர்த்தி நிகழ்த்துதுமே. ௮௩

உந்தியி னின்று மிதயாந்தஞ் சோடச முற்றதளப்
பந்தம தானவெண் டாமரை யாசனப் பாவகமாம்
நந்தலில் மூர்த்தி யிலாடாந்தஞ் சோதி நணுகுருவ
முந்திய சூக்கும மூர்த்திய தாகவு முற்றிடுமே. ௮௪

முற்று மிறைக்கு நியாசங்கள் செய்வது போல்முடித்துப்
பற்றறு மூலத்தி ஞற்பத மாதி பகர்சிரமட்
டுற்றிடு மந்திர மெல்லா முடலி லொருமைசெய்தல்
பெற்றிடு மாமுத் திரையென வாகமம் பேசிடுமே. ௮௫

சொல்லும் பிரமத்தைப் பீசங் குறைத்துச் சொலிற்றகித்து
வெல்லும் பவத்தைச் சடங்கத்தைத் தீர்க்கம தாய்விளப்பிற்
செல்லும் பரமுத்தி சேர வுகாரந் தெரிந்துரைக்கிற்
புல்லும் பராந்த முதலா வுடலுள்ளும் பூரிக்குமே. ௮௬

ஓதிப் பிரணவத் தாற்பிராண யாம முயர்மறையோ
ராதிய மூவர்க் கருகமவ் வாரியன் சாதகர்க்கு
நீதிய முக்கலை யஞ்செழுத் தாலு நிகழ்த்திடுவர்
சாதிய சங்கிதை சற்புத் திரற்குஞ் சமயிக்குமே. ௮௭

அகத்தினில் வாயு வசுசிய தாகையி ஞல்விடுத்துப்
புகப்புற வாயுத் திரித்திட ல்ாகும் புகல்பலன்ருன்
செகத்தினில் யாவ ரொருவரோர் கன்மஞ் செயுமிடத்து
மிகத்தன் னு ளத்தை யொருமித்துச் சாதிப்பர் மெய்யுறவே.

ஆங்கது போற்சந்திச் சத்தித் தியான மமர்பொருட்டு
வாங்கியவ் வாயு வடக்கில் மனதொரு மிக்குமதாற்
பாங்குறச் செய்வது சத்தப் பயனுயிர்ப் பாம்வெளியைத்
தீங்கறப் போக்கு வரத்தினைச் செய்த லெனச்செப்புமே. ௮௯

செப்புமக் கையை விரித்து வலச்செவி சேர்த்திடுத
லொப்பில் செவியக் கினிமுதற் றேவ ருறைகையினு
லெப்பி லிரேசகம் பூரகஞ் சேர்கர மீறில்சுத்தி
தப்பறச் செய்பொருட் டாய்ப்பரி சிக்குந் தகைமையதே. ௯௰

பூரக மாதிய தாற்செயிற் போகம் புணர்த்தியிடு
நேரக மாநின்று ரேசக மாதி நிகழ்த்தன்முத்தி
தாரக மாத்திரை யுத்தம மாதிய தானுரைக்கில்
ரேசக மாத்திரை பன்னிரண் டாமென் றியம்புவரே. கூக

பெருத்திடு பூரக மூவிரண் டாகும் பிறங்குகும்ப
மருத்திடு மூவெட்டு மாத்திரை யாகு மதுவதன்ம
மிருத்து மிரட்டி யிடையிதின் மூன்றுறி லோவிசிட்டங்
கருத்துறு சந்தியிற் சிந்தனை வேறுறிற் காட்டுதுமே. கூஉ

காட்டு மசுரர் கலகத்தி னூற்பலன் காண்பதில்லை
நாட்டுங் குரவ ரறிவாற் கருதுவ நாலுசந்தி
நீட்டு முதயத் திரவிப்ர காச நிகழுமுச்சி
கோட்டமின் ஞான மதிப்பிர காச மெனக்குறியே. கூங

குறிக்கு நிசிமுன் னமுத சலநிதி யோசைகொளல்
மறிக்கு மிரவி னடுப்பட வற்ற பெருகொளியா
மிறக்கு மிதயம் புருவ நடுச்சிர மேலுமென்பர்
பொறிக்கின்ற ஞாதர் தாமிரண் டாகப் புகலுதுமே. கூச

சிவதன் மிணியாப் பரையினை முச்சந்தி தேர்ந்திடுவ
ரவர்பின் னுலோக தருமிணி முச்சந்தி யாய்ந்துகொள்வர்
பவமது தீர்ந்து பரமுத்தி யெய்தும் பலனதென்ப
ருவமையில் சங்கிதை யாற்கும்ப நீர்தலை யுற்றிடிலே. கூரு

எய்து மமுத குடம்பொழிந் தாலொக்கு மீறில்சிரத்
துய்யும் புரோக்கண மாற்சனத் தாலுட லுற்றபவ
நய்யு மகமா மருடணத் தாலுண் ணயந்தபவங்
கொய்யும் பினுமந்த ந்யாசப் பயனையுங் கூறுதுமே. கூசா

இத்தகை ந்யாச மிதுசூக் குமவுடற் சுத்தியென்று
மொத்திடு கண்டிகை தன்னிற் செபிப்பவ ரோங்குமனுச்
சித்திய தாமள வுஞ்செபித் தாலென வுஞ்சிறந்த
நித்திய குண்டத் திலங்கியி லோமம் நிறைப்பவரே. கூஎ

ஆறிய வக்கினி தன்னைச் சொலிப்பித் தடிக்கடிநெய்
தேறிய வாகுதி செய்வது போற்றிறை யாநிசித்தல்
பேறியல் கையிற் செலவமு தாற்றனைப் பேணிச்சுற்றல்
கூறிய தர்ப்பண மந்திர தீபன மாக்குறியே. கூஅ

கொள்ளுமத் தேவ ரிருடிகள் பூதங் குறிபிதிர்க்கள்
தெள்ளு மவர்கள் திருத்திப் பொருட்டெனச் செப்பிடுவர்
விள்ளு மனுவைச் சுவாவெனி லிச்சை மிகுகிரியை
யுள்ளிய ஞானம் பிரகாச மாமென் றுணர்ந்துகொள்ளே. ௯௬

ஓதுஞ் சுதாந்த முனமுரைத் தோநம வோதிலொன்றும்
பேத மினிமந் திரஞ்சம பாகம் பெறும்வவுஷட்
டேதமி லந்தப் புறக்கர ணப்பல மெய்தியதா
னீத முறுந்தெய்வந் தன்னை யழைத்தலென் நீதியதே. ௯௭

வஷடந்த மாவ துபாசித்த தெய்வம் வசீகரித்த
லிசைகொள் படந்தம தெவ்விக் கினத்தையு மீண்டடர்த்த
லிசமந் நிபந்தக் கரமாதி கேசரி நீள்விலங்கு
நசைதரு மாதுட்ட செந்துக்கள் யாவையும் நாசமதே. ௯௮

ஆதலி னுலிது கூட்டி மனுவை யறிந்துரைத்துப்
பேதமி லாத நியாசக் கிரியைகள் பேணியிடி
லேதமி றேவவிக் னங்களுஞ் சாந்தியை யெய்தியிடுந்
தீதக றேக மதிற்சிவ சாநித்தஞ் சேர்ந்திடுமே.

சூரியன் றன்னை நமஸ்காரம் பண்ணிற் றொடர்பிணியின்
வீரிய மான வியாதியெ லாமறு மேன்மறுமைக்
கோரிய லாமுத்தி யுற்றிடு மென்ன வுரைத்திடுவர்
காரிய மாநிய திப்பயன் மாணவ கண்டுகொள்ளே.

நியதிப் பயன்

வினாவிடை

முற்றிற்று.

கண்ணுடைய வள்ளலார் கனகழலே சரண்

---

The Progressive Printers Madras.